

# Voice of Jagadguru

advaitam paramanandam  an e-magazine on advaita



## ஸத் ஸம்ப்ரதாயம் (உபாஸனா)

(An Unit of the e magazine Voice of Jagadguru)

## ஸ்ரீ சிருங்கேரீ சாரதாபீடம் மஹாஸந்நிதானம் ஸ்ரீஸ்ரீ பாரதீ தீர்த்த மஹாஸ்வாமிகள் அருளுரை

சிலருக்கு இளம் வயதிலிருந்தே மோக்ஷமடையவேண்டும் என்ற விருப்பம் இருக்கும். கூட்டத்திலிருந்து விலகித் தனிமையில் இருப்பது. ஸாத்விக உணவு சாப்பிடுவது. வேதாந்தப் புத்தகங்களைப் படிப்பது ஆகிய குணங்கள் இயற்கையாகவே அவர்களிடம் வளர்ந்து வரும். கொஞ்சம் கொஞ்சமாக த்யானத்தில் ஈடுபாடு உண்டாகும். அந்த ஸாதகன் தன் முற்பிறவியில் செய்த புண்யத்தின் பலனாலேயே இது ஏற்படும். மீண்டும் மீண்டும் எடுக்கப்படும் பல பிறவிகளில் உண்டாகும் உறுதியான பழக்கங்களின் விளைவாக இந்த சரீரம்தான் நான் என்ற லிபரீத பாவம் திரும்பத்திரும்ப மனதில் தோன்றலாம். அதேபோல் இந்த உலகம்தான் ஸத்யம் என்றும் தோன்றலாம். இது தவறான எண்ணம். ஏகாக்ர சித்தத்துடன் த்யானம் செய்யச்செய்ய இந்தத் தவறான எண்ணம் மறைந்துவிடும்.



बहुजन्मदृढाभ्यासात् देहादिष्वात्मधी: क्षणात् ।
पुन: पुनरुदेत्येयं जगत्सत्यत्व धीरपि विअरीता भावनेयं एकाग्रयात् सा निवर्तते ॥
ப³ஹுஜன்மத்³ரு’டா⁴ப்யாஸாத் தே³ஹாதி³ஷ்வாத்மதீ⁴: க்ஷணாத் |
புன: புனருதே³த்யேயம்’ ஜக³த்ஸத்யத்வ தீ⁴ரபி
விஅரீதா பா⁴வனேயம்’ ஏகாக்³ரயாத் ஸா நிவர்ததே ||

ஆகையால் ஸாதகன் எப்பொழுதும் ஆத்மாவை தேஹத்திலிருந்து வேறாகக் கருதி, ஆத்மாவிலேயே மனதைச் செலுத்தி, இவ்வுலகம் நிஜமில்லை என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

तत्वभावनया नश्येत् साऽतो देहातिरिक्ताम् । आत्मनो भावयेत् तद्वत् मिथ्यात्वं जगतोऽनिशम् ॥
தத்வபா⁴வனயா நஶ்யேத் ஸா(அ)தோ தே³ஹாதிரிக்தாம் |
ஆத்மனோ பா⁴வயேத் தத்³வத் மித்²யாத்வம்’ ஜக³தோ(அ)நிஶம் ||

## ஸத் ஸம்ப்ரதாயம் (உபாஸனா)

(An Unit of the e magazine Voice of Jagadguru)

இதை நன்றாக மனதில் பதியவைத்துக்கொள்ளும் ஸாதகன், உலக வ்யவஹாரம் செய்யும் ஸமயத்திலும், சாந்தமாக இருக்கமுடியும். அவன் எந்த விஷயங்களாலும் பீடிக்கப்படமாட்டான்

*ஸ்ரீ பாரதீ தீர்த்த மஹாஸ்வாமிகளின் அருளுரைகள்*

உலகத்திலே மனிதனுக்கு இரண்டு விஷயங்களில் “மோஹம்” உண்டாகிறது. அவை “பெண்” மற்றும் “பொன்” என்பவையே. இந்த இரண்டிலும் மோஹமடைந்தவன் தவறுகளைச் செய்ய ஆரம்பிக்கின்றான். எவனுக்கு இந்த இரண்டிலும் மோஹம் இல்லையோ அவனே “மஹாத்மா” எனப்படுகிறான். இராவணன் சீதையைத் தவறான பார்வையில் பார்த்தான்; அழிந்து விட்டான். இதனால் என்ன தெரிகிறது என்றால், உலகத்தில் எந்தப் பெண்ணையும் தவறான நோக்கத்தில் பார்க்கக் கூடாது என்பதுதான். நம்முடைய பாரதப் பண்பாட்டிலேகூட, “உலகிலுள்ள அனைத்துப் பெண்களும் தாயாருக்குச் சமானம் என்றுதான் கருதப்பட வேண்டும்” என்பதைத்தானே கூறியிருக்கிறார்கள்! ஒருவன் எப்படிப்பட்ட தீயவனாயினும் சரி, தன் தாயாரின் விஷயத்தில் எவ்விதக் கெட்ட எண்ணத்தோடும் இருக்க மாட்டான். எல்லாப் பெண்களையும் தாயாராக பாவித்தால் மனதிலே எவ்வித விகாரமும் ஏற்படாது. தேவீமாஹாத்மியத்திலே தேவதைகள் அந்த பரதேவதையைத் துதிக்கும்போது “ஸகல ஸ்த்ரீகளும் உன் ஸ்வரூபமே” என்று கூறுகிறார்கள். இதைப் பின்பற்றும் வண்ணமாகத்தான் நம்முடைய முன்னோர்களும் நமக்கு வழிமுறைகளை உபதேசித்திருக்கிறார்கள். இதற்கு மாறாக நாம் நடந்தோமானால் அது மிகப் பெரும் தவறாகிவிடும்.

பிறருடைய சொத்தை நாம் சிறிதும் விரும்பக் கூடாது. தெருவில் எவ்வளவோ கல்லும் மண்ணும் நிறைந்து கிடக்கின்றபோதிலும் எவருடைய மனதேனும் அவற்றை நாடுகின்றதா? இதே பாவனையைத்தான் நாம் பிறருடைய சொத்து விஷயத்திலும் வைத்துக் கொள்ள வேண்டும். இந்த பாவனை எவனுக்கு இல்லையோ, எவன் பிறர் சொத்தை அபகரிக்க நினைக்கிறானோ அவனுக்கு துரியோதனனுடைய கதையே ஓர் எச்சரிக்கை! துரியோதனன் தனது சிற்றப்பாவின் பிள்ளைகளுக்கு முறைப்படிச் சேர வேண்டிய சொத்துக்களைக் கொடுக்காமல் தானே அனைத்தையும் ஆண்டு அனுபவிக்கப் பேராசைப்பட்டான்; விளைவை அனுபவித்தான். பணக்காரனாக இருந்தால்தான் சந்தோஷம் என்பதில்லை. எப்படிப்பட்ட நிலையிலும் சுகமாக இருக்கலாம். இந்த தத்துவத்தை மறந்தோமானால் அதர்மங்களும் அநியாயங்களும் அதிகரிக்கும். மாறாக, “பொன்”னில் இருக்கும் மோஹத்தை நாம் நீக்கி விட்டோமானால் திருப்தியும் சந்தோஷமுமான ஜீவிதம் நமக்கு உண்டாகும்.

ஸத் ஸம்ப்ரதாயம் (உபாஸனா)

(An Unit of the e magazine Voice of Jagadguru)

## ஜகத்குரு ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவாபிநவ நரஸிம்ஹ பாரதீ மஹாஸ்வாமிகளின் திவ்ய சரித்திரம்

### 7. ஞான நிலை



ஸ்ரீ ஸதாசிவேந்திரருடைய ஆத்மவித்யா விலாஸத்தை யாரேனும் ஒரு சிஷ்யரைக்கொண்டு வாசிக்கச்சொல்விட்டு ஐந்தாறு சுலோகங்கள் வாசிக்கிறதுக்கு முன்னாலேயே ஸகல விருத்திகளும் அடங்கி ஸமாதி நிலையடைந்துவிடுவார்கள். ஒரு ஸமயம் வனத்தில் ஸமாதி நிஷ்டையிலிருக்கும்போது ஒரு காட்டு ஈ இவர்கள் துடையில் உட்கார்ந்து முள்ளுப்போல் கூர்மையாயுள்ள கொடுக்கினால் குத்தி யதேஷ்டமாய் ரக்தபானம் செய்துவிட்டது. துடையின் மேலும் பூமியிலும் ரக்தம் வழிந்திருந்தது. ஸமாதி கலைந்து பஹிர்முகமான பிறகுதான் இந்த ஸம்பவமே அவர்களுக்குத் தெரிய வந்தது. யாத்திரை மத்தியிலும் அநேக இடங்களில் பூஜை தீபாராதனை முடிந்து நமஸ்காரம் செய்து தியானத்திற்கு உட்கார்ந்து சில நிமிஷங்களுக்குள் ஸமாதி நிலையேற்பட்டு த்வைத பாவனையற்று இருந்து விடுவார்கள். சிஷ்யர்கள் பிரஸாதத்திற்கு காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்றும், ஸ்ரீமடம் கார்யங்கள் மேல்நடக்கவேண்டுமேயென்றும் சேண்டியை பலமாக அடித்து ஸமாதியைக் கலைக்கும்படி ஏற்பட்டிருக்கிறது. அப்பொழுதும் தன்னுடைய கருணைப்பெருக்கினால் இதையொரு அபசாரமாக பாவிக்காமல் பஹிர்முகமாகி சிஷ்யர்களை மந்தஹாசத்தால் அனுக்ரஹிப்பார்கள்.

### 8. யோக சக்தி

## ஸத் ஸம்ப்ரதாயம் (உபாஸனா)

(An Unit of the e magazine Voice of Jagadguru)

இவர்களிடத்தில் ஸித்திகள் தானாகவே ஏற்பட்டது ஆச்சர்யமில்லை. பலவிதமான வியாதிகளால் பீடிக்கப்பட்டவர்களும், புத்திர ஸந்தானத்தை அபேக்ஷித்தவர்களும், பூதப்பிரேத பிசாசாதி ஆவேச முள்ளவர்களும், மற்றும் அநேகர்களும் தங்கள் தங்களுடைய இஷ்டப் பிராப்திக்காகவும், அநிஷ்ட நிவிருத்திக்காகவும் ஆசார்யாரையண்டி பிரார்த்திக்கும்போது அம்பிகையினிடத்தில் பாரத்தைப் போட்டுவிட்டு விபூதியோ ஜலமோ அபிமந்த்ரணம் செய்து கொடுத்தும், யந்திரதாரணம் செய்வித்தும், மந்திரோபதேசம் செய்வித்தும் அவரவர்களுடைய மனோபீஷ்டங்களை நிறைவேற்றிக் கொடுத்திருக்கிறார்கள். அவர்கள்

मातर्वाधिर्यमूकीभवनमुखमहारोगसंपीडिताङ्गा
भूताविष्टाश्च तत्तत्प्रशमनमचिरात् काङ्क्षमाणाः सुदूरात् ।
आगत्याश्वेव तत्तत्प्रशमनपटुतां मन्यमाना जनेऽस्मिन्
याचन्ते किं प्रकुर्यां वद तुहिनगिरीशानपुत्रीन्दुमौले ॥
மாதர்வாதி⁴ர்யமூகீப⁴வனமுக²மஹாரோக³ஸம்பீடி³தாங்கா³
பூ⁴தாவிஷ்டாஶ்ச தத்தத்ப்ரஶமனமசிராத் காங்க்ஷமாணா: ஸுதூ³ராத் ।
ஆக³த்யாஶ்வேவ தத்தத்ப்ரஶமனபடுதாம்’ மன்யமானா ஜனே(அ)ஸ்மின்
யாசந்தே கிம்’ ப்ரகுர்யாம்’ வத³ துஹினகி³ரீஶானபுத்ரீந்து³மௌலே ॥

என்ற விதமாய் அம்பிகையைப் பிரார்த்தித்திருக்கிறார்கள். இவர்களுடைய அனுக்ரஹத்தினால் அனுகூலமடைந்த ஜனங்களுக்குக் கணக்கேயில்லை. திருஷ்டாந்தமாக நாகர்கோவிலுக்கு ஸமீபத்தில் ஆச்ராமம் என்ற கிராமத்தில் ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி என்ற வித்வானுக்கு ஊமையாகவும் செவிடாகவும் ஒரு பிள்ளையிருந்தது. தன் துக்கத்தை அவர் ஆசார்யாரிடம் தெரிவித்ததில் ஒரு மந்திரத்தை உபதேசித்து ஜலத்தில் அபிமந்த்ரணம் செய்து பிராசனம் செய்து வைக்கும்படி சொன்னார்கள். அப்படியே செய்ய அவனுக்கு வாக்கும் சுரோத்ரமும் சரியாகி கிரமப்படி உபநயன ஸம்ஸ்காரம் செய்விக்கப்பட்டது. இவ்விஷயத்தை இவர் சிஷ்யரான ஆசார்யாரவர்கள்

आश्रामवासिवटुमेकमभाषमाणं संभाषमाणमकरोत् त्वरितं कृपातः ।
ஆஶ்ராமவாஸிவடுமேகமபா⁴ஷமாணம்’
ஸம்பா⁴ஷமாணமகரோத் த்வரிதம்’ க்ரு’பாத: ।

என்று தன்னுடைய நவரத்னமாலிகா ஸ்தோத்திரத்தில் கண்டிருக்கிறார்கள்.

(தொடரும்...)

ஸத் ஸம்ப்ரதாயம் (உபாஸனா)

(An Unit of the e magazine Voice of Jagadguru)

## ॥ श्रीगणेशभुजङ्गम् ॥

.. ஶ்ரீக³ணேஶபு⁴ஜங்க³ம் ..




यमेकाक्षर निर्मलं निर्विकल्पं
गुणातीतमानन्दमाकारशून्यम् ।
परं पारमोंकारमाम्नायगर्भं बदन्ति
प्रगल्भं पुराणं तमीडे ॥ ७ ॥

यं {யம்’} = எவரை; एकाक्षरंनिर्मलं {ஏகாக்ஷரம்’நிர்மலம்’} = ஒன்றாயும் அழிவற்றதாயும்; निर्विकल्पं {நிர்விகல்பம்’} = சந்தேகமற்றதாயும்; गुणतीतं {கு³ணதீதம்’} = ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களுக்கும் அப்பால் உள்ளத்தையும்; नन्दं {ஆனந்த³ம்’} = ஆனந்தரூபியாயும்; आकारशून्यं {ஆகாரஶூன்யம்’} = உருவம் அற்றதாயும்; परं पारं {பரம்’ பாரம்’} = மற்றொரு கரையாகவும்; ओंकारं {ஓங்காரம்’} = பிரணவ ரூபமாயும் ; आम्नायगर्भं {ஆம்நாயக³ர்பே⁴} = வேதங்களைத் தன்னுள்கொண்டதாயும் ; प्रगल्भं {ப்ரக³ல்ப⁴ம்’} = ஸாமர்த்யம் உள்ளதாயும்; पुराणं {புராணம்’} = பழமைவாய்ந்த தாயும்; वदन्ति {வத³ந்தி} = கூறுகின்றனரோ; तं {தம்’} =அந்த கணபதியை; ईडे {ஈடே³} = போற்றுகிறேன்.

இதுகாறும் கணாதீசனின் ஸகுணஸ்வரூபம் வர்ணிக்கப் பட்டது. ஸகுணமூர்த்தியை உபாஸிப்பவன் ஞானத்தைப் பெறுகின்றான். அதையடைவதற்கு இடையூறாகக் காணப்படுவது அஞ்ஞானமே. அதை அகற்ற இறைவன் அருள் தேவை. அவர் அருளால் அஞ்ஞானமென்ற இருள் நீங்கியவுடன் ஞானச்சுடரே நம் கண்முன் காட்சியளிக்கின்றது. அப்பொழுது நாம் இறைவனின் உண்மையான ரூபத்தை உணர்கின்றோம். அதுதான் एकमेव अद्वितीयम् ஏகமேவ அத்³விதீயம் என்று ச்ருதிகளால் வர்ணிக்கப்பட்டுள்ளது. அப்பரம்பொருள் மாசற்றது. மாறுபாடற்றது. முக்குணங்களுக்கும் உட்படாதது. உருவம் அற்றது. ஆனந்தஸ்வரூபமானது. வேதங்களுக்கெல்லாம் இதுவே மூலபூதமானது. ஓம் என்னும் பிரணவம் இதையே குறிக்கின்றது. இதை வழிபடுவதால் நாம் தத்வஞானத்தைப் பெற்று நிரதிசயமான ஆனந்தத்தைப் பெறலாம். ஆதலால் நாம் இந்த ஓங்கார கணபதியைப் போற்றுவோமாக. (7)

## ஸத் ஸம்ப்ரதாயம் (உபாஸனா)

(An Unit of the e magazine Voice of Jagadguru)

चिदानन्दसान्द्राय शान्ताय तुभ्यं
नमो विश्वकर्त्रे च हर्त्रे च तुभ्यम् ।
नमोऽनन्तलीलाय कैवल्यभासे
नमो विश्वबीज प्रसीदेशसूनो ॥८॥



चिदानन्दसान्द्राय {சிதா$^{3}$னந்த$^{3}$ஸாந்த்$^{3}$ராய} = ஞானானந்த ஸ்வரூபியாயும்; शान्ताय {ஶாந்தாய} = அமைதி நிறைந்தவராயும் உள்ள;तुभ्यं {துப்$^{4}$யம்'} = உமக்கு; नमः {நம:} = வணக்கம்; विश्वकर्त्रे च {விஶ்வகர்த்ரே ச} = உலகைப்படைப்பவராயும்; हर्त्रे च {இர்த்ரே ச} = அழிப்பவராயுமுள்ள; तुभ्यं {துப்$^{4}$யம்'} = உமக்கு; नमः {நம:} = வணக்கம்; अनन्तलीलाय {அனந்தலீலாய} = எல்லையற்ற திருவிளையாடல்களையுடையவரும்; कैवल्यभासे {கைவல்யபா$^{4}$ஸே} = (உண்மையில்) தாம் ஒருவராகவே விளங்குபவருமான உமக்கு; नमः {நம:} = வணக்கம்; विश्वबजि {விஶ்வப$^{3}$ஜீ} = உலகின் காரணமான; ईशानसूनो {ஈஶானஸூனோ} = பரமேச்வரனின் திருக்குமாரா; प्रसीद {ப்ரஸீத$^{3}$} = பிரசன்னமடைவாயாக.

கடவுளை வழிபடும் முறையை நன்று அறிந்து வழி படுதலே சிறந்த வழிபாடு. அவரைப் போற்ற விரும்பும் ஒவ்வொருவனும் அவர்தான் உலகத்தைச் சிருஷ்டிப்பவன், காப்பவன், அழிப்பவன் என்று அறியவேண்டும். அவரன்றி அணுவும் அசையாதெனக் கூறுவர் சான்றோர். அவர்தான் ஞானானந்த ஸ்வரூபி, சாந்தர், மோக்ஷத்தைத் தருபவர். ஆகையால் அப்படிப்பட்டவருக்கு நாம் வணக்கம் செலுத்துவது அவச்யம். அவரது அனுக்ரஹத்தை யாம் வேண்டுவோமாக. (தொடரும்)



# Voice of Jagadguru

advaitam paramanandam  an e-magazine on advaita



## ஸத் ஸம்ப்ரதாயம் (உபாஸனா)

(An Unit of the e magazine Voice of Jagadguru)

### ||ஶிவபக்தி கல்பலதிகா||

ஶ்ரீ ஶ்ரீதர ஐயாவாள்

त्वत्संस्मृतित्वदभिधानसमीरणादि सम्भावनास्पदममी मम सन्तु शोकाः |

मा सन्तु च त्वदनुषक्तिमुषः प्रहर्षाः मां त्वत्पुरःस्थितिपुषेश दृशानुपश्य ||१

த்வத்ஸம்'ஸ்ம்ரு'தித்வத³பி⁴தா⁴னஸமீரணாதி³ ஸம்பா⁴வனாஸ்பத³மமீ மம ஸந்து ஶோகா: |

மா ஸந்து ச த்வத³னுஷக்திமுஷ: ப்ரஹர்ஷா: மாம்' த்வத்புர:ஸ்தி²திபுஷேஶ த்³ரு'ஶானுபஶ்ய ||16||



உம்மை நினைப்பது உன் பெயரை கூறுவது முதலான நடைபெறுவதற்கு நல்ல வாய்ப்புக்களை ஏற்படுத்தும் வகையில் எனது இந்த கவலைகள் ஏற்படட்டும். உன்னுடன் உள்ள தொடர்பைத் திருடுகிற (அதாவது துண்டிக்கிற) இனிய நிகழ்ச்சிகள் நேராதிருக்கட்டும். உம் முன் என்னை இருத்தி போஷணை செய்யும் பார்வையால் ஈசனே என்னைப் பார்ப்பீராக.

दुःखं प्रदित्सुरयि में यदि न प्रदद्याः दुःखापहं पुरहर त्वयि भक्तियोगम् |

त्वद्भक्त्यलाभपरिचिन्तनसम्भवं मे दुःखं प्रेदेहि तव कः पुनरत्र भारः ||१७||

து³:க²ம்' ப்ரதி³த்ஸுரயி மேம்' யதி³ ந ப்ரத³த்³யா: து³:கா²பஹம்' புரஹர த்வயி ப⁴க்தியோக³ம் |

த்வத்³ப⁴க்த்யலாப⁴பரிசிந்தனஸம்ப⁴வம்' மே து³:க²ம்' ப்ரேதே³ஹி தவ க: புனரத்ர பா⁴ர: ||17||

சிவபெருமானே ! ஸுகங்களில் ஆழ்த்துவதோ இல்லை துக்கத்தில் தள்ளுவதோ அல்லது வேறு மாற்று திட்டமோ, உமது தனிப்பட்ட ஏற்பாடாகும். எதனை யோசித்து திட்டமிடுகிறீரோ அதை (நன்றாக) செய்யுங்கள். நான் எனக்கு நன்மை எது என்று அறியேன். ஆதலால் உம்மையே சரணமடைந்தவன் நான். (தொடரும்)

ஸத் ஸம்ப்ரதாயம் (உபாஸனா)

(An Unit of the e magazine Voice of Jagadguru)

# सन्ध्यावन्दनम्

## ஸந்த்⁴யாவந்த³னம்

[சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த மஹாஸ்வாமிகள் அருளிய விளக்கங்களுடன்]

**ஸந்த்யாவந்தனம் செய்யும் வேளை:**

उत्तमा तारकोपेता मध्यमा लुप्ततारका ।
अधमा सूर्यसहिता प्रातः सन्ध्या त्रिधा मता ॥
**(देवीभागवतपुराण ११.१६.४; विश्वामित्रस्मृति १.२२)**

உத்தமா தாரகோபேதா மத்⁴யமா லுப்ததாரகா |
அத⁴மா ஸூர்யஸஹிதா ப்ராத꞉ ஸந்த்⁴யா த்ரிதா⁴ மதா ||
**(தே³வீபா⁴க³வதபுராண 11.16.4; விஶ்வாமித்ரஸ்ம்ரு’தி 1.22)**



"நக்ஷத்திரங்கள் இருக்கும்பொழுது செய்வது உத்தமம். நக்ஷத்திரங்கள் தென்படாதபொழுது செய்வது நடுத்தரம் ஸூர்யன் உதித்தபிறகு செய்வது கடைத்தரம். இம்மாதிரி காலை ஸந்த்யா (அர்க்யம்) மூன்று விதமாகக் கருதப்படுகின்றது" என்று கூறப்படுகிறது.

उत्तमा सूर्यसहिता मध्यमाऽस्तमिते रवौ ।
अधमा तारकोपेता सायं सन्ध्या त्रिधा मता ॥
**(देवीभागवतपुराण ११.१६.५)**

உத்தமா ஸூர்யஸஹிதா மத்⁴யமா(அ)ஸ்தமிதே ரவௌ |
அத⁴மா தாரகோபேதா ஸாயம்’ ஸந்த்⁴யா த்ரிதா⁴ மதா ||
**(தே³வீபா⁴க³வதபுராண 11.16.5)**

"ஸூர்யன் இருக்கும்பொழுது செய்வது உத்தமம். ஸூர்யன் அஸ்தமித்த பிறகு (நக்ஷத்திரங்கள் தெரிவதற்கு முன்பு) செய்வது நடுத்தரம். நக்ஷத்திரங்கள் தெரிந்த பிறகு செய்வது கடைத்தரம் என்று மாலை ஸந்த்யாவந்தனம் (அர்க்யம்) மூன்று விதமாகக் கருதப்படுகிறது" என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. உத்தமமான சமயத்தில் செய்ய முடியாது என்றால் நடுத்தர சமயத்திலோ, கடைத்தர சமயத்திலோ செய்யவேண்டும். சரியான நேரத்தில் செய்யாவிட்டாலும், ஸந்த்யாவந்தனத்தையே செய்யாவிட்டாலும்

## ஸத் ஸம்ப்ரதாயம் (உபாஸனா)

(An Unit of the e magazine Voice of Jagadguru)

விதியை மீறியதுபோல்தான் ஆகும். ஆனால் குறிப்பாக ஸந்த்யாவந்தனத்தைச் செய்யாமல் விட்டால் ஒருவனுடைய அந்தணத்துவமே நாசமாகிவிடும். பௌதாயன தர்ம ஸூத்ரத்தில்,

सायं प्रातः सदा सन्ध्यां ये विप्रा नो उपासते ।
कामं तान्धार्मिको राजा शूद्रकर्मसु योजयेत् ।।
**(बौधायनधर्मसूत्र २.४.७.१५)**

ஸாயம்' ப்ராத: ஸதா³ ஸந்த்⁴யாம்' யே விப்ரா நோ உபாஸதே |
காமம்' தாந்தா⁴ர்மிகோ ராஜா ஶூத்³ரகர்மஸு யோஜயேத் ||
**(பௌ³தா⁴யனத⁴ர்மஸூத்ர 2.4.7.15)**

"மாலையிலும் காலையிலும் எந்த ப்ராஹ்மணர்கள் ஸந்த்யையை உபாஸிப்பதில்லையோ, தர்மத்தில் ஈடுபாடுள்ள அரசன் தனது இச்சைப்படி அவர்களை மற்றொருவனின் சேவையைச் செய்யவைக்கட்டும்." என்று சொல்லப்பட்டுள்ளது. சரியான சமயத்தில் செய்யாவிட்டால் பலன் குறையும். மூன்று நாட்களுக்குச் சரியான சமயம் மீறின பிறகு செய்தால் ஒரு நாளுக்கு ஸந்த்யாவந்தனமே செய்யாதது போலாகும்.

### கர்மாக்களின் பிரிவு:

'நித்திய', 'நைமித்திக', 'காம்ய' கர்மாக்களின் வகுப்பில் ஸந்த்யாவந்தனம் எங்கு சேரும் என்று ஆராய்வோம். நித்திய கர்மா 'நியத-நிமித்த'மாக இருக்கின்றது. காலத்திற்குக் காலம் மீண்டும் மீண்டும் செய்யப்பட வேண்டும் என்று ஸாஸ்திரத்தில் விதிக்கப்படுகின்ற கர்மா நித்திய கர்மா எனப்படுகிறது. உதாரணத்திற்கு தினமும் மூன்று வேளைகள் செய்யப்பட வேண்டிய ஸந்த்யாவந்தனம், வருடா வருடம் செய்யப்பட வேண்டிய பித்ரு ஸ்ராத்தம் ஆகியவை நித்திய கர்மாக்கள். நைமித்திக கர்மா என்றால் 'அநியத-நிமித்த மானது. க்ரஹணத்தின் போது குளித்தல் இதற்கு எடுத்துக் காட்டாகும். ஏதோ ஒரு குறிப்பிட்ட ஆண்டில் க்ரஹணம் ஏற்படாமலும் போகலாம். ஆதலால் க்ரஹணக் குளியல் அநியத-நிமித்தம். காம்ய கர்மா என்பது ஆசையுடன் செய்யப்படும் கார்யம். காம்ய கர்மாக்களைச் செய்யாமல் விட்டால் அதனால் பாவம் ஏற்படாது. இதற்கு உதாரணம் காரீரி இஷ்டி (மழைக்காகவே செய்யப்படும் வேதத்தில் சொல்லப்பட்ட ஒரு யாகம்). ஸூர்யனின் உதயமும், அஸ்தமனமும் ஸந்த்யாவந்தனத்தைச் செய்யக் காரணங்கள். இவை தவறாமல் தினமும் நேரிடுகின்றன. ஆகையால், 'நியத-நிமித்த' மானதால் ஸந்த்யாவந்தனம் 'நித்திய கர்மா' என்ற பிரிவில் தான் சேரும். (தொடரும்)

ஸத் ஸம்ப்ரதாயம் (உபாஸனா)

(An Unit of the e magazine Voice of Jagadguru)

## श्रीमन्नारायणीयम्

## ஸ்ரீமந்நாராயணீயம்

### षष्ठं दशकम्

ஷஷ்ட²ம்' த³ஶகம் விராட்புருஷநின் வடிவ வர்ணனை

त्वद् ब्रह्मरन्ध्र पदमीश्वर विश्वकन्द
छन्दांसि केशव घनस्तव केशपाशाः ।
उल्लासि चिल्लियुगलं द्रुहिणस्य गेहं
पक्ष्माणि रात्रिदिवसौ सविता च नेत्रे ॥ ४ ॥



த்வத்³ ப்³ரஹ்மரந்த்⁴ர பத³மீஶ்வர விஶ்வகந்த³
ச²ந்தா³ம்'ஸி கேஶவ க⁴னஸ்தவ கேஶபாஶா꞉ ।
உல்லாஸி சில்லியுக³ளம்' த்³ருஹிணஸ்ய கே³ஹம்'
பக்ஷ்மாணி ராத்ரிதி³வஸௌ ஸவிதா ச நேத்ரே ॥ 4 ॥

உலகின் அடித்தளம் போன்ற குருவாயூரப்பா ! உமது பிரம்மரந்திரம் (உச்சி) வேதங்களானது. ஹே ப்ரபோ! உமது தலை மயிர் மேகங்களாகவும் , உம்முடைய அழகிய பிரகாசமான புருவங்கள் அந்த பிரம்மனுடைய மாளிகையாக விளங்குகிறது. இமைகளின் மயிர் இரவும் பகலும் என்று ஆனது. உம்முடைய கண்கள் சூரியன்என்று சொல்லப்படுகின்றது.

निः शेषविश्वरचना च कटाक्षमोक्षः
कर्णौ दिशोऽश्वियुगलं तव नासिके द्वे ।
लोभत्रपे च भगवन्नधरोत्तरोष्ठौ
तारागणाश्च दशनाः शमनश्च दंष्ट्रा ॥ ५ ॥

நி꞉ ஶேஷவிஶ்வரசனா ச கடாக்ஷமோக்ஷ꞉
கர்ணோ தி³ஶோ(அ)ஶ்வியுக³ளம்' தவ நாஸிகே த்³வே ।
லோப⁴த்ரபே ச ப⁴க³வன்னத⁴ரோத்தரோஷ்டௌ²
தாராக³ணாஶ்ச த³ஶனா꞉ ஶமனஶ்ச த³ம்'ஷ்ட்ரா ॥ 5 ॥

பகவானே குருவாயூரப்பா ! உமது கடைக்கண் பார்வையே உலகனைத்தின் சிருஷ்டியாக விளங்குகிறது, உமது காதுகள் திசைகள் ஆகின, நாசித்வாரங்கள் அச்வினீ தேவதைகளாகவும், கீழுதடும் மேலுதடும் லோபமும் வெட்கமும் என்று மறுவியது, உமது ஒளி வீசும் பற்கள் நக்ஷத்ர கணங்களாக ஜொலிக்கின்றன, யமன் உம்முடைய தெற்றிப்பல் என்று சொல்லப்படுகின்றது.

(தொடரும்...)



# Voice of Jagadguru

advaitam paramanandam  an e-magazine on advaita



ஸத் ஸம்ப்ரதாயம் (உபாஸனா)

(An Unit of the e magazine Voice of Jagadguru)

# श्री रुद्रप्रश्नः

ஶ்ரீ ருத்³ரப்ரஶ்ன:

ஶ்ரீ ருத்³ரப்ரச்னம்

(நமகம்)




1.1. ஓம் (பகவதே) பகவானாகிய (ருத்ராய) ருத்ரருக்கு (நம:) நமஸ்காரம்.

(ருத்ர) ருத்திரரே! (தே) உம்முடைய (மன்யவே) கோபத்திற்கு (நம:) நமஸ்காரம். (உத) மேலும் (தே) உம்முடைய (இஷவே) பாணத்திற்கு (நம:) நமஸ்காரம். (தே) உம்முடைய (தன்வனே) வில்லிற்கு (நம: அஸ்து) நமஸ்காரம் இருக்கட்டும். (உத) மேலும் (தே) உம்முடைய (பாஹுப்யாம்) இரு கைகளுக்கும் (நம:) நமஸ்காரம்.

1.2. (ருத்ர) ருத்திரரே! (தே) உம்முடைய (யா) எந்த (இஷு:) பாணம் (சிவதமா) சிறந்த மங்களமுடையதாக (யபூவ) உளதோ, (தே) உம்முடைய (தனு:) எந்த வில் (சிவம்) மங்களமுடையதாக (பபூவ) உளதோ, (தவ) உம்முடைய (யா) எந்த (சரவ்யா) அம்பறாத்தூணி (சிவா) மங்களமுடையதாக உளதோ (தயா) அவற்றால் (ந:) எங்களை (ம்ருடய) இன்புறச் செய்யும்.

1.3. (ருத்ர) ருத்திரரே! (கிரிசந்த) கயிலையங்கிரியிலிருந்துகொண்டு உலகிற்கு இன்பத்தை ஊட்டுபவரே! உம்முடைய (அகோரா) சாந்தமானதும் (சிவா) மங்களமானதும் (அபாபகாசினீ) பாவம் நீங்கிய மோட்சநிலையைப் பிரகாசப்படுத்துவதுமான (யா) எந்த (தனு:) வடிவம் உளதோ (தயா) அந்த (சந்தமயா) உயர்நலமளிக்கும் (தனுவா) வடிவால் (ந:) எங்களுக்கு (அபிசாகசீஹி) எங்கும் ஆத்மதத்துவம் விளங்கும்படி அருள்வீராக.

## ஸத் ஸம்ப்ரதாயம் (உபாஸனா)

(An Unit of the e magazine Voice of Jagadguru)

1.4.(கிரிசந்த) கயிலையங்கிரியிலிருந்து கொண்டு உலகிற்கு இன்பத்தை ஊட்டுபவரே! (கிரித்ர) கயிலையங்கிரியிலிருந்துகொண்டு சரணமடைந்தோரை ரக்ஷிப்பவரே! (அஸ்தவே) பாவிகள் மேல் பிரயோகிப்பதற்காக (ஹஸ்தே) கையில் (யாம் இஷும்) எந்த பாணத்தை (பிபர்ஷி) தரிக்கிறீரோ (தாம்) அதை (சிவாம்) சாந்தமாக (குரு) செய்யும். (புருஷம்) மக்களையும் (ஜகத்) உலகத்தையும் (மா ஹிம்ஸீ:) துன்புறுத்த வேண்டாம்.

Our Website link : https://voiceofjagadguru.com/voj/

Telegram Channel : https://t.me/voiceofjagadguru

Instagram Channel :

https://www.instagram.com/stories/voice_of_jagadguru_voj/3601249542534134684?igsh=MW90YW13N2c5b2hqaA==

WhatsApp Community Channel: https://chat.whatsapp.com/Ly4wlaTu8Kc3sjjEYU8KGu

YouTube Channel : https://youtube.com/@jagad-guru-channel?si=brkLFqiz8sZJ6UIl

Facebook link : https://www.facebook.com/share/1Du5xkve4e/

For free e magazines : Our Mail ID : Info@voiceofjagadguru.com

ஜகத்குரு சங்கராசார்யர் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ மஹாஸந்நிதானம் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ பாரதீ தீர்த்த மஹாஸ்வாமிகள், ஜகத்குரு சங்கராசார்யர் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ ஸந்நிதானம் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ விதுசேகர பாரதீ மஹாஸ்வாமிகள் அவர்களின் பொற்பாதங்களில் சமர்ப்பிக்கிறோம்